**Sri M. KALYANASUNDARAM :** காஞ்சிபுரம் ரூட்டை அரசாங்கமே எடுத்துக்கொள்ள வேண்டுமென்று மூன்று வருஷத்திற்கு முன்னமே முடிவு செய்யப்பட்டது. அதன் அடிப்படையில் உத்திரவும் பிறப்பிக்கப் பட்டது. அப்படி இருந்தும் அதைக் கைவிட்டதற்குக் காரணம் என்ன ?

**The Hon. Sri V. RAMAIAH :** இந்த முடிவு எடுக்கப்பட்ட பிறகு மீண்டும் கொள்கையைப் பரிசீலனை செய்த காலத்தில் 120 மைல்களுக்குள் உள்ள ரூட்டுகளை அரசாங்கம் எடுத்துக்கொள்ளப் போவதில்லை என்று முடிவு எடுக்கப்பட்டது. அதன் பிரகாரம் இது கைவிடப்பட்டது.

**Sri M. KALYANASUNDARAM :** அப்படியானால் காஞ்சீபுரம் வரை நடத்தப்படும் அரசாங்க பஸ் போக்குவரத்து கைவிடப்படுமா ?

**The Hon. Sri V. RAMAIAH :** எடுக்கவேண்டியதுதான்.

### *Steel rolling mill*

* 1695 *Q.*—Sri V. K. KOTHANDARAMAN: }
Sri N. K. PALANISAMI : } கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்தில் Steel Rolling Mills ஆரம்பிக்கும் ஏற்பாடு எந்த நிலையிலுள்ளது ?

(இ) அது எங்கே ஆரம்பிக்கப்படும் ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** (*a*) It is presumed that the hon. Member refers to the proposal to establish a steel re-rolling mill in the public sector. Action is being taken to prepare a project report and to obtain a licence from the Government of India under the Industries (Development and Regulation) Act, 1951 for the establishment of the steel re-rolling mill.

(*b*) The precise location of the mill has not been decided yet.

**Sri V. K. KOTHANDARAMAN :** அரக்கோணத்தில் கட்டட வசதிகளும் மற்ற வசதிகளும் இருப்பதனால், அங்கே ஆரம்பித்து நடத்து வதற்கு சர்க்கார் உத்தேசிக்குமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** எந்த இடத்தில் செய்யவேண்டுமென்று முடிவு செய்யப்படவில்லை. அரக்கோணத்தில் நல்ல வசதிகள் இருந்தால் அதுவும் கவனிக்கப்படும்.

**Sri R. SRINIVASA IYER :** புதிதாக சில ஸ்டீல் ரோலிங் மில் வைக்கப்போகிறார்கள் என்று சொல்லப்பட்டது. இப்பொழுது நாகப்பட்டி ணத்தில் இருக்கக்கூடிய ஸ்டீல் ரோல்லிங் மில்லின் கபாசிடியை இரண்டு பங்காக உயர்த்துவதற்கு ஏற்பாடு செய்வதாகச் சொல்லப்பட்டது. அதை இந்த மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்தில் சேர்த்து செய்ய உடனடியான நடவடிக்கை எடுக்குமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** நாகப்பட்டிணத்தில் இருப்பது பிரைவேட் செக்டார். இப்பொழுது மொத்தம் லைட் ஸ்டரக்சுரல் ஆங்கில் பார் ராட் முதலியவை 1,11,450 டன் தேவை என்று மதிப் பிடப்பட்டிருக்கிறது. பப்ளிக் செக்டாரில் 20,000 டன் உற்பத்தி செய்யக் கூடிய ஒரு ஸ்டீல் ரோலிங் மில் ஏற்படுத்த ஒரு கோடி ரூபாய் செல வாகும். பிரைவேட் செக்டாரில்கூட சில பேர்கள் மனு போட்டிருக் கிறார்கள். இதை அரசாங்கம் கவனித்து வருகிறது.

22nd September 1961]

SRI N. K. PALANISAMI : The Hon. Minister has stated that the mill would be started in the public sector. May I know whether the private sector would be allowed to invest 49 per cent of the share capital?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : This is purely in the public sector and I do not understand how the private shareholders could come in there.

*Closure of hotels in Coimbatore town*

* 1696 *Q.*—SRI N. MARUDACHALAM : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கோவை டவுன் ஓட்டல் முதலாளிகள் ஓட்டல்களை மூடியதால் தொழிலாளிகள் வேலையில்லாமல் தவிப்பதைக் குறித்து கோவை ஜில்லா ஓட்டல் தொழிலாளர் சங்கம் 1961–ம் ஆண்டு மே மாதம் 31-ம் தேதி ஜூன் மாதம் 6-ம் தேதி, 20-ம் தேதி, 25-ம் தேதிகளில் சர்க்காருக்குப் புகார் செய்துள்ளதா ?

(இ) அதன் மீது சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) இல்லை, ஐயா.

(*b*) எழவில்லை.

SRI N. MARUDACHALAM : கோவையில் உள்ள மக்கள் உணவு விடுதியில் உள்ள தொழிலாளர்களை வேலையிலிருந்து நீக்கிவிட்டு, வேறு பெயரில் புதிதாகக் கட்டப்பட்ட ஒரு உணவு விடுதி ஏற்படுத்தியிருக்கிறார்கள். இதைப் பற்றித் தொழில் இலாக்காவிற்கும், தொழில் அமைச்சருக்கும், லேபர் ஆபீசருக்கும் எழுதியும் ஒருவிதமான நடவடிக்கையும் எடுக்கவில்லை. ஆகவே, அவர்களை மீண்டும் உடனடியாக வேலையில் அமர்த்திக்கொள்வதற்கு அரசாங்கம் உத்தரவிடுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஒவ்வொரு ஓட்டல் பிரச்னையையும் தொழில் அதிகாரிகள் கவனித்து சமரசம் செய்து கொண்டுவருகிறார்கள். சில இடங்களில் அவர்களால் சமரசம் செய்ய முடியாமல் போய்விடுகிறது. உதாரணமாக இப்பொழுது இருக்கக்கூடிய நிர்ப்பந்தத்தின் காரணமாக ஓட்டல் முதலாளிகள் வேலை நடத்த முடியாத நிலைமையும் ஏற்படுகிறது.

SRI V. K. KOTHANDARAMAN : ஹோட்டல்களை ஒரேயடியாக மூடிவிடுவதில்லை. தொழிலாளர்கள் நியாயமான கோரிக்கைகளைக் கேட்கிறபோது போர்டை மாற்றிவிடுகிறார்கள். இரண்டு மாதங்களுக்கு முன்பு கோயம்புத்தூரில் கிருஷ்ண லாட்ஜ் என்று இருந்தது. அதில் "ஸ்ரீ" என்று சேர்த்து ஸ்ரீ கிருஷ்ண லாட்ஜ் என்று மாற்றிவிட்டார்கள். இப்படித் தொழிலாளர்களை ஏமாற்றக்கூடிய அளவுக்கு தொழிலாளர்களின் கோரிக்கைகளைத் தீர்த்து வைக்க முடியாத அளவிற்கு நிலைமையிருக்கிறதே, இது போன்ற பிரச்னைகளைத் தீர்த்து வைப்பதற்கு என்ன பரிகாரம் காணப்படுகிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அங்கத்தினர் அவர்கள் குறிப்பிடுகிற பிரச்னை ஏற்பட்டால் அதை எந்தெந்த வகையில் தீர்த்து வைக்க வேண்டுமோ அப்படித் தீர்த்து வைக்க அதிகாரிகள் கவனம் செலுத்துகிறார்கள். இங்கு, கமிஷனர் ஆப் லேபர் தெரிவித்திருக்கும் அபிப்பிராயத்தை வாசிக்க விரும்புகிறேன். இது கோவையைப் பற்றி. அங்கு அதிகமாக ஹோட்டல்களில் இந்தத் தகராறு வந்தது.